[27th September 1958

SRI S. LAZAR : அந்தப் பகுதியில் இப்படிப்பட்ட விபத்துகளி ளுல் பல லட்சக்கணக்கான ரூபாய் சேதமாகிறது. இப்படி ஆண்டு தோறும் நடந்து வருகிறது. அதனுல் அந்தப் பகுதியில் ஒரு பயர் சர்வீஸ் யூனிட்டை வைப்பதற்கு என்ன செலவாகும் ? அதைப்பற்றி சர்க்கார் உடனடியாகப் பரிசீலனை செய்வார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : முன்பே இதைப்பற்றிய விவரங்களுக்கு பதில் அளித்து இருக்கிறேன். நிலைமையையும் விளக்கியிருக்கிறேன். நகரப்புரங்களிலும், நகரசபைகள் இருக்கக்கூடிய இடங்களிலும் இன்னும் அநேகம் பயர் சர்வீஸ் வைக்க வேண்டியதாக இருக்கிறது. அங்கேயெல்லாம் வைத்த பிறகுதான் பஞ்சாயத்து ஏரியாக் களுக்கு வைப்பதற்கு முயற்சி எடுத்துக்கொள்ளப்படும். ப்ரையாரிட்டி லிஸ்ட் ஒன்று போடப்பட்டு அதன்படி கவனிக்கப்பட்டு வருகிறது.

SRI K. R. VISWANATHAN : உடையார்பாளையம் பகுதியில் அடிக்கடி இப்படிப்பட்ட தீ விபத்துகள் ஏற்படுகின்றன. அதனுல் அதிகப் படியான நஷ்டம் ஏற்படுகிறது. அதனுல் அரியலூரில் ஒரு பயர் சர்வீஸ் தீயணைக்கும் படை நிலையங்கள் வைக்கவேண்டும் என்று பல மகஜர்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அவைகளின் முடிவு என்ன ? நண்பர் லாஸ ருக்குக் கொடுத்த பதிலின் விவரம் என்ன என்பதை அறிய விரும்பு கிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : முன்பே சொன் னேன். பல நகர சபைகளுக்கு அநேகம் கொடுக்க வேண்டியதாக இருக் கிறது. அவைகளுக்குக் கொடுத்த பிறகுதான் பஞ்சாயத்து ஏரியாக் களுக்கு வைக்க வேண்டும். நகர சபைகளுக்கு விஸ்தரித்த பிறகுதான் பஞ்சாயத்துகளில் வைப்பதற்கு கவனிக்கப்படும்.

SRI K. PERIANNAN : பெரம்பலூர் தாலுகாவில் தீ விபத்துகள் அநேகம் ஏற்பட்டு பல லட்சக்கணக்கான ரூபாயும், பொருளும், பல உயிர்களும் சேதமாகி இருக்கின்றன. இது அரசாங்கத்திற்குத் தெரியுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்பொழுது கணக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதிலிருந்து கனம் அங்கத்தினர் நன்ருகத் தெரிந்துகொள்ளலாம்.

SRI S. LAZAR : அரசாங்கத்தின் பதிலிலிருந்து ஒரு ப்ரையாரிட்டி லிஸ்ட் தயாரிக்கப்பட்டிருப்பதாக அவர்கள் அறிவிக்கிருர்கள். அந்த ப்ரையாரிடி லிஸ்ட் எப்பொழுது அமைக்கப்பட்டது ? அதை ரிவைஸ் பண்ணு வதற்கு நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்போழுது தயாரிக்கப் பட்டிருக்கக்கூடிய லிஸ்டின் பிரகாரம் முதலில் முனிசிபாலிட்டிகளி லும் நகரங்களிலும் வைக்கப்பட்ட பிறகுதான் மற்ற இடங்களைப்பற்றி கவ னிக்கப்படும். முதலில் நகரங்களை எடுத்துக்கொள்ள வேண்டியதாக இருக் கிறது. அதற்குப் பிறகுதான் பஞ்சாயத்து பிரதேசங்கள் கவனிக்கப்படும்.

*Literacy*

MR. SPEAKER : Hon. Member Sri T. T. Daniel is not in his place. So, his question No. 576 and the answer thereto will be printed in the official proceedings.

* 576 *Q.*—SRI T. T. DANIEL : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) the percentage of literacy in the State (i) at present and (ii) in the beginning of the First Five-Year Plan period;

27th September 1958]

(*b*) the target to be reached at the end of the Second Five-Year Plan period; and

(*c*) the steps to be taken to reach this target?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) (i) 24·32 per cent.

(ii) 20·2 per cent.

(*b*) & (*c*) No targets as such have been fixed. However, it has been planned to enrol additionally 105,000 pupils of the age group 6—14 every year and to open 60 adult schools each year.

*Fisheries*

* 577 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் ஸ்தல-ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) கோயமுத்தூர் ஜில்லாவிலே மீன் வளர்ப்புக்கான நடவடிக்கைகள் எந்தெந்த இடங்களிலே எடுக்கப்பட்டு வருகின்றன ?

(ஆ) அவை சம்பந்தப்பட்ட அதிகாரிகள் எந்தெந்த இடங்களிலே இருக்கிறார்கள் ?

(இ) இவர்களால் நடத்தப்பட்டுவரும் அலுவல்கள் யாவை ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (*a*) & (*b*) In Coimbatore district fisheries work is now being done at Coimbatore, Amaravathi, Gobichettipalayam, Bhavani, Bhavanisagar and Srimugai. The work at each of these first three places is in charge of an Inspector of Fisheries stationed at these centres. For Bhavani and Srimugai, there are two Assistant Inspectors, one for each place. The work at Bhavanisagar, where a research station is located, is attended to by the Assistant Director (Fresh Water Biology) and the Hydrologist stationed there.

(*c*) A statement [a] is placed on the table of the House.

SRI K. B. S. MANI : கோபிசெட்டிபாளையம் தாலூகாவில் லோகல் டெவலப்மெண்ட் சம்பந்தப்பட்ட இடங்களில் மீன் வளர்ப்புக்கான சௌகரியம் இருப்பதாகத் தெரிகிறது குறிப்பிலிருந்து. ஆகவே விவசாய நிலங்களில் இருக்கக்கூடிய கிணறுகளில் மீன் வளர்ப்புத் திட்டத்தைக் கொண்டுவருவதற்கு சர்க்காரே முன் வருமா, அதைப்பற்றி பரிசீலனை நடத்துமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : இப்பொழுது சர்க்கார் பரிசீலனை செய்து வருகிறது. தேவையானால் அங்கத்தினர் சொல்வதைப்பற்றியும் கவனிக்கப்படும்.

MR. SPEAKER : இப்பொழுது 10-00 மணி ஆகிவிட்டது. 10 கேள்விகள் தான் இன்னும் பதிலளிக்கப்பட வேண்டியிருக்கிறது. இன்னும் 10 நிமிஷம் உட்கார்ந்து அவைகளையும் முடித்துவிடுவோம்.

*Khadi and Village Industries*

* 578 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) கோயமுத்தூர் ஜில்லாவிலே காதி-கிராமக் கைத்தொழில் கமிஷன் மூலம் கிடைத்த உதவியைக்கொண்டு முதலாவது ஐந்தாண்டு திட்ட காலத்திலே என்னென்ன தொழில்கள் எந்தெந்த இடங்களிலே ஆரம்பிக்கப்பட்டன ?

---

[a] Printed as Appendix VI on pages 882–884 infra.